உ

கணபதி துணை.

திருக்கோணமலை

# ஆலடிவிநாயகர் பதிகமும், அகவலும்.





இவை

திருக்கோணமலை

கா. பசுபதிப்பிள்ளையால்

ஆலடிவிநாயகப்பெருமான்மீது

துதியாகச்

சொல்லப்பட்டவை.

---

கொக்குவில்

சோதிடப்பிரகாசயந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டன.

விபவஸு பங்குனிமீ. 1939

உ

கணபதி துணை.



திருக்கோணமலை

# ஆலடி விநாயகர்

# பதிகமும், அகவலும்.



இவை

திருக்கோணமலை

கா. பசுபதிப்பிள்ளையால்

ஆலடிவிநாயகப்பெருமான்மீது
துதியாகச்
சொல்லப்பட்டவை.

---

கொக்குவில்
சோதிடப்பிரகாசயந்திரசாலையில்
பதிப்பிக்கப்பட்டன.

விபவ௵ பங்குனி௴.

1930

# சிறப்புப்பாயிரம்.

---

கொக்குவில்
சோதிடபரிபாலினிப் பத்திராதிபர்
பிரமஸ்ரீ சி. இரகுநாதையரவர்கள்
சொல்லியவை.

---

**வெண்பா.**

தித்திக்குஞ் சிந்தைதனில் தீர்க்கும் பவப்பிணியை
முத்திக்கு வித்தாய் முளைக்குமே—பத்திசெய்வார்க்
கின்பம் பயக்கு மெழிற்பசுப திப்பிள்ளை
யன்பினாற் சொல்லிய பா.

## விருத்தம்.

சீரோங்கு கோணமலை மேவுமா லடியெனுந்
திருமலி செழும்பதியினிற்
சிந்தித் தவர்கள்துயர் முந்தியே தீர்த்தருள்
சீவகா ருண்யவாரி
பாரோங்கு நற்றவத் தவர்கள்பணி கற்பகம்
பரவுவார்க் கருவரங்கள்
பாலித் தருளிவதி மேலைப் பரம்பொருள்
பகர்தந்தி முகவன்மீது
தாரோங்கு பாவலர்க ளாற்றுசெந் தமிழினிற்
சாற்றினான் பதிகமகவல்
தண்ணளி யடக்கமுட னன்னுபொறை யீகைசிவ
தன்மமுறு பத்திநெறியான்
பேரோங்கு புகழினன் பேணுநற் றிருவினன்
பெட்புமிகு பேரறிவினன்
பிஞ்ஞக னடிபணி கார்த்திகே யன்றரு
பிரான்பசு பதிப்பிள்ளையே.

## கட்டளைக்கலித்துறை.

தேவார மேவு திருக்கோண மாமலைச் செய்யவட
மேவாரு மைங்கரன் மேல்வைத்த வன்பின் விளங்குதமிழ்ப்
பாவார மொன்று புனைந்தணிந் தான்வினை பாறிவிழப்
பூவாருங் கீர்த்திப் பசுபதிப் பிள்ளைப் பெயரினனே.

# முகவுரை.

## திருக்கோணமலை,
## சைவாங்கில உயர்தரகலாசாலைத்
## தலைமைத் தமிழாசிரியர்
## ஸ்ரீமாந் ஏ. பெரியதம்பிப்பிள்ளையவர்கள்
## எழுதியது.

திரு. ஆலடிவிநாயகர் பதிகமும் அகவலுமாகிய இவை திருக்கோணமலையிற் கோவில்கொண்டருளிய ஆலடிவிநாயகப் பெருமான்மீது தோத்திரமாகப் பாடப்பட்டவை. இவற்றை இயற்றியவர் கதிரையம்பதிக் கந்தவேள்பதிக நூலாசிரியராவர். செய்யுள்கள்யாவும் சொற்சுவையும், இசைச்சுவையும், பொருட்சுவையும் மிக்குள்ளன. விநாயகப் பெருமான் சிவபிரானது அம்சமாயுள்ளவர் என்பது இவற்றால் இனிது புலனாகின்றது. தெய்வத்துக்கும் மனிதனுக்குமுள்ள அன்பு, தந்தைக்கும் பிள்ளைக்குமுள்ள அன்புபோன்றது என்பதை இந்நூலகத்துக் காணலாம். இறைவன் அளவிடற்கரிய திருமேனியுடையவனாயினும் அளவிடற்குரிய திருமேனியுடன் அன்பர்கட்குக் காட்சிதந்தருளுவன் என்பதை இந்நூலைப் படிப்போர் தெளிந்துகொள்ளுவர். பெருநூல்கள் பலவற்றுட் காண்டற்குரிய சரித்திரக் குறிப்புகள் பல இவற்றுட் காணப்படுதலால் ஆசிரியரின் நூலாராய்ச்சி வன்மை வெளியாகின்றது. உலகியல் நூல்களுட் பெரும்பாலும் தமது மனத்தைப் புகுத்துதலால் மனவிளைப்படைவோர்க்கு இந்நூல்கள் மருந்துபோன்று உறுதிபயக்கும். ஆதலின், இவை சைவசமயிகள் யாவராலும் ஓதத்தகுவன என்பது எமது எண்ணம்.

---

கணபதிதுணை.

# திருக்கோணமலை
# ஆலடிவிநாயகர் பதிகம்.



## காப்பு.

### வெண்பா.

சிந்தையுறு தந்தித் திருமுகநின் றுள்பா வி
யுந்துதமி ழூற்றுதிக ளோதவே—வந்து நா
மாதெனக்கு நல்வாக்கு மல்கி யருள்புரி ய
வேதா கிருபை மி க.

### ஆசிரியம்.

திருமருவு கங்கையுந் திகழ்மதிய முந்தவழ்
செஞ்சடைக் கடவுளுதவு
திவ்யகுண பூஷணு திங்கள்வத னும்பிகை
திருமைந்த தந்திமுகவ
மருமருவு மலர்மார்ப மானினோர் வல்லபை
மணவாள கருணைநல்கும்
வள்ளலே நின்னன்பர் மனமதே கோயிலாய்
வதிந்திடு மின்பவமுதே
உருமருவு செம்பவள வொளிமேனி யாயேழை
யோதிநின் புகழ்கள்பாடி
உபயபத மேத்திடா வன்னெஞ்ச னுயிடினு
மொப்பிலா யெனிலிரங்கித்
திருவரவு மௌனவாட்டு துயரெலாஞ் சிதையவுஞ்
செழுமைதந் தருள்புரிகுவாய்
செல்வமிகு திரிகோண யாலடி விநாயகத்
தேவநின் சரணனக்கே. (க)

தந்திபெறு திருமுகஞ் செக்கர்வான் சடையினொடு
தனிக்கோடு திரிநேத்திரந்
தயங்குமிகு தண்ணளியி னோங்குநீ ளோங்காரந்
தடமுற்றெ ழுந்தவெழிலார்

தொந்திவயி றுந்நனி துலங்குமெய் யன்பர்வினை
தடையருட் புனிதபதமுந்
துகளற்ற வின்பமே துய்யமணி மேனிபொலி
தோற்றமிகு காட்சிதருவாய்
அந்தமில கருணைபொழி யானந்த மேகமே
யடைந்தவர் வேண்டுமெதுவு
மவாவகல வுதவுதிரு வமரர்தரு வேகமல்க
ளரியதுணை யெனவடைந்தேன் .
செந்திருவி னருள்மல்க வென்றுயர்கள் சிதையவே.
செழுமைதந் தருள்புரிகுவாய்
செல்வமிகு திரிகோணை யாலடி விநாயகத்
தேவநின் சரணெனக்கே. (உ)

அம்புயா சனன்முதல வமரர்கய முகவனு
லடையவல மகலவருளா
ரம்பிகையொர் பாகனரு ளோங்கரத் துங்கமிகு
மானைநல் வதனவழகார்
செம்பவள வொளிதிகழு மாசகலு மேனியாய்
திரிநயன தேவியுமையாள்
செப்புமரு ளாழிபெறு செங்கணன் சேடனுரு
தெரிசனைப் போதுநீத்தாய்
வம்பவிழு மாலையா யென்முறைக ணின்செவியில்
வந்தெய்த விலையோமதி
வளருமுழு வதனவல் லபையைவா மத்திலே
வைத்தவழ காவிரங்கிச்
செம்பதுமை யருளவுந் துயரெலாஞ் சிதையவுஞ்
செழுமைதந் தருள்புரிகுவாய்
செல்வமிகு திரிகோணை யாலடி விநாயகத்
தேவநின் சரணெனக்கே. (ந)

எங்கெந்த வமையத்து மெவரெவர்க ளேதுவினை
யெய்துமு னுனதுபூசை
யியற்றுவார் சித்தியுள வின்பவரு ளல்குமரு
மிணையற்ற கருணைநிதி
சிந்தைசெய் துன்பூசை செய்புமுறை யறிகிலாச்
சிறுவனேற் கருளில்லையோ

தேவனே நின்சர்வ தயாபரத் துவம்மறை
செப்பியது மவமாகுமோ
மைந்தர்செய் குறையெது வுமனமீதி னீன்றதாய்
வைத்துமிகல் புரிவதுண்டோ
வளமேவு கருணைமிகு வாரியே யருடந்தி
வதனனே யெனிலிரங்கிச்
சிந்தைதிரு மல்கவென் றுயரெலாஞ் சிதையவுஞ்
செழுமைதந் தருள்புரிகுவாய்
செல்வமிகு திரிகோணை யாலடி விநாயகத்
தேவநின் சரணெனக்கே. (ச)

அங்கென்று மிங்கென்று மில்லாம லெங்குமா
யகிலநிறை வானபொருளே
யருமறையு மாகமமு முணர்வரிய வுனதுசீ
ரறிவிலே னறியவசமோ
துங்கமிகு கருணையாய் தாதழக வலவைதன்
றோண்மருவு காதலோங்கு
தூயனே யென்குறையு முறையுமறி யாய்கொலோ
தோன்றலே யுவகையுருவே
யிங்குநின் கருணைநல் காதெனைக் கைவிடி
னெந்தவித முய்வுபெறுவே
னேதம்ல் செழும்பாகு மினியமுப் பழமுநுக
ரெழிற்றடத் தொந்திவயிறாய்
செங்கமல மாதினருள் பெற்றுநான் வாழவே
செழுமைதந் தருள்புரிகுவாய்
செல்வமிகு திரிகோணை யாலடி விநாயகத்
தேவநின் சரணெனக்கே. (ரு)

எல்லாமு மறிந்தவரு மெல்லாமும் வல்லவரு
மோதுமறி யாதுமியலார்க்
கிருந்திடி னெந்தவழி யென்றுயர்க ளகலுமோ
வின்பமெவ் வாறுவருமோ
பொல்லாத வன்கண்ண னுயிடினு முன்கருணை
பொதுவலாற் பக்கமுறுமோ
போதுமீண் டின்றுவரை பட்டதுய ரினியெனுற்
பொறுத்தலிய லாதறிகுவாய்

வல்லவொண் மருப்பிறுத் தவுணவெங் கயமுகன்
மருமம்பி ளந்தமரரின்
வாழ்வளித் திடுகருணை வாரியே யெனதுமுறை
மன்னுகுறை யேற்றிரங்கிச்
சொல்லுதிரு மல்கியென் றுயரெலாஞ் சிந்தவே
செழுமைதந் தருள்புரிகுவாய்
செல்வமிகு திரிகோணை யாலடி விநாயகத்
தேவநின் சரணனக்கே. (௬)

இந்திரனின் வழிபாட் டினுக்கிசைபு கொடியுருவ
மெய்தியே குறுமுனிவனங்
கேந்திவரு கமண்டலத் திருந்துகா விரிபூமி
யிடமுருத் தெதிர்ந்தகுறியோன்
சிந்தைதரு மாடலொடு வடிவினுற் காட்சியுந்
சித்தமின் புறவளித்த
செம்மலே தந்தியார் திருவதன வைந்துகர
தேசுலவு கமலபாதா
எந்தையே தேவர்க்கு மெட்டாத தெய்வமே
யேழையேன் முறைகள்கேட்டு
வின்பவள மாகவென திதயங் களிக்குமா
றிதுபொழு தெழுந்தருளியே
செந்திருவு மல்கவென் றுயரெலாஞ் சிதையவுஞ்
செழுமைதந் தருள்புரிகுவாய்
செல்வமிகு திரிகோணை யாலடி விநாயகத்
தேவநின் சரணனக்கே. (எ)

எல்லாமும் வல்லவுன் றிருவருட் கரியதா
யெதுவுமிலை யிதுசரதமே
யாதலா லேயுனரு ளென்றுய ரறிந்துமவை
யகலவரு ளாதிருத்தல்
நல்லதோ வுன்பரம நணியரு ளிலக்கணம்
நவிலவிது மாகுமோவின்
நாயினே னுன்னருட் பேறுபெறு மிகுகருணை
நாட்டமுற வருகனலனே

பொல்லாத மைந்தனே லாய்தள்ள லாகுமோ
புன்மையேற் குறுதியெங்கோ
புகலரிய காருண்ய மும்மதத் தாறுபாய்
புழைக்கை முகாவிரங்கிச்
சொல்லரிய திருமல்க வென்றுயர்கள் சிதையவுஞ்
செழுமைதந் தருள்புரிகுவாய்
செல்வமிகு திரிகோணை யாலடி விநாயகத்
தேவநின் சரணெனக்கே. (௮)

ஆதித்த னம்புலியு மழகுசே யறிபுந்தி
யண்டர்குரு வெள்ளிசனியு
மாலமுறு ராகுகே துக்களா மரவுக்க
ளாநவக் கோட்களாலு
மோதிடுந் நாள்கடிதி யோகமொடு கரணமிவை
யொருமித்து மல்லாமலு
முவப்பிலா தின்றுவரை யின்னற்ப டுத்திடுமெனை
யுற்றிடுந் தோடமெல்லாஞ்
சோதிமிகு கதிரொளி வீசியெழு பானுமுன்
றுண்ணென்ன வகலுமிருள்போற்
றாயகரு ணாநிதித் தும்பிமுக வின்பமிகு
தூயவரு ளொளிபரப்பித்
தீதில்திரு மல்கவென் றுயரெலாஞ் சிதையவுஞ்
செழுமைதந் தருள்புரிகுவாய்
செல்வமிகு திரிகோணை யாலடி விநாயகத்
தேவநின் சரணெனக்கே. (௯)

கல்லாத வேளைநின் காதலில் லேன்றிருக்
கழற்புகழ் பாடலெளிதோ
கருதிலாப் பிணிமிடித் துயர்கதித் தெழமனங்
கலக்கமுற் றுன்மலர்த்தா
ளல்லாமல் வேறுகதி யவனிமீ தில்லையென்
றகவுறுதி கொண்டறிந்த
வளவையிற் பசுபதிப் பிள்ளைசொல் தமிழ்குற்ற
மனைவுறினு மருளுகந்து

சொல்லாரு மக்கள்மொழி மழலைகேட் டின்புறுந்
துயரிலாத் தந்தைதாய்போற்
றுகள்களெல் லாம்பொறுத் தருள்வளரு மெந்தையே
தூயவனை போலிரங்கிச்
செல்வதிரு மல்கவென் றுயரெலாஞ் சிதையவுஞ்
செழுமைதந் தருள்புரிகுவாய்
செல்வமிகு திரிகோணை யாலடி விநாயகத்
தேவநின் சரணெனக்கே. (௧௦)

பதிகம் முற்றும்.

---

# அகவல்.

சீரா ரிலங்கைச் சிரமென விளங்கும்
பேரார் திருவளம் பெறுதிருக் கோணை
மாமலை யாலடி வைகியே விளங்கு
வாமன சொரூப மகேசுர புத்திர
சிந்தைக் கெட்டாத் தேவனே திருவார்
தந்தி யானனத் தானுவே கருணை
முந்துறப் பொழியும் முக்கணு வென்றுயர்
சிந்திட வருளுக திகழு மேரம்ப
திருமலி பங்கய மருமலர்த் திசைமுகன்
கருநிற மேனிக் கண்ணனு மானும்
ஏதமி லமரரு மிருடிகள் மற்றும்
பூதலத் தமர்வகுப் புச்சரா சரமெலாம்
தானாய் நிலவு சருவ வியாபக
மானார் விழியுமை மைந்தனே மாசிலாப்
பிரணவ சொரூபப் பெருந்தகை யேநின்
சரணுறு மேழை தனைக்காத் தருளுக
செம்பவ ளந்திகழ் தேசுறு மேனியாய்
வம்பவி ழலர்த்திரு மானுறு வல்லபை
மருவுறு தோளாய் மாசிலா வின்பந்
தருமரு ளாய்சிவன் றந்திடு மைந்தனே
உம்பர்க் கிடர்புரி யுளமே வியதிறற்
றும்பிமா முகனைத் துணித்தே விண்ணவர்
தப்பத முதவிய தயாபர னேமல

ரம்பத சரணொற் கனுதின மருளுக
முப்பழ மப்பம் மோதக மவல்பொரி
யொப்பி லதிரச மோதுசெங் கரும்பும்
வடையுடன் றுவரை வள்ளிக் கிழங்கு
கடலையும் பயறுங் கண்டு செழும்பாக்
காரெள் ளுந்தேன் கவினுறு செவ்விள
நீரொடு தயிர்பால் நெய்கறி யமுதெலாம்
குடவயி னிறையவுண் கும்பகெம் பீர
கடகளி றேநின் கழலிணை சரணம்
ஓங்கா ரத்தி னுள்ளொளி யாகித்
தீங்கா மெவையுஞ் சேரா தருள்புரி
விக்கின விநாயக விண்ணவர் தலைவா
முக்கணன் றந்தருள் மூஷிக வாகனா
அருவு முருவு மல்லவு மாகித்
தருமூல கெங்குந் தானா கியவா
இனிமையாம் பொருள்க ளெல்லாந் திரண்டு
நனியுறு மின்ப நலமார் குன்றே
நெடுநா ளாக நிலைத்து நின்றென்
வடிவங் குலைத்து மனத்துய ரீட்டிய
பிணிகளால் யானும் பெருமிடர்ப் பட்டு
மணிமந் திரங்கள் மருந்துகள் செய்தும்
வருசுக மொன்றும் மருவுறா தயர்ந்து
திருவார் நின்கழற் றிக்கெனக் கொண்டேன்
எல்லாம் வல்ல விறைவநின் கருணை
யல்லா லென்பிணி யகற்றிடு மவுடதம்
உலகில்வே றிலையீ துண்மை யாதலின்
மலரடி தஞ்ச மாமென வணங்கிப்
பாடியே நின்புகழ் பலவிசை துதித்து
வாடிநின் றிரங்கி வருந்திடு மேழை
செய்பிழை பொறுத்துச் சிறுவனென் றுன்னிக்
கைவரு நின்றிருக் கருணையை யீன்ற
வன்னையின் மேலா யடியனுக் குதவி
என்னை வருத்து மிப்பிணி மிடிகள்
முந்திய வினையின் தொந்தமாய் முடுகி

வந்தவை யாயினும் வழுத்திடு மொன்பான்
வன்மையார் கோட்கள் வலிமையா லல்லது
புன்மையா ரருவப் பேய்களா லல்லது
வன்மன மாற்றார் வஞ்சகச் செயலால்
மன்னிய துயர்கள் மருவினு மவைக
டன்னைப் பகலவன் றருமொளி கண்டு
பின்னிட் டிழியிருட் பெற்றிய தென்ன
மாண்டுகெட் டோடவும் மாண்பார் செந்திரு
பூண்டிடு மின்பமும் புனிதமார் வாழ்வும்
ஈண்டே யெய்த விரங்கிநின் னருளொளி
வேண்டி யிரந்தேன் விக்கின விநாயகா
காண்டகு மின்பக் கருணையாய் தில்லையிற்
றாண்டவ மாடி தனையா வருளுக
ஒப்பர் மிக்கா ரொருவரு மில்லாச்
செப்பார் கருணைத் தேவே யருளுக
அரிதனக் கம்மை யளித்த சாபநின்
றெரிசனை யளவையிற் றீர்த்தவா வருளுக
செக்கர்ச் செஞ்சடைத் திருமுத லருளார்
முக்கணு வகில முதல்வா வருளுக
வேண்டுவார் வேண்டுவ தீவாய் நினதருள்
வேண்டிடு மென்றுயர் வேரற வருளுக
அஞ்சிவந் தவர்க டம்மை யாதரித்
தஞ்சலென் றருள்புரி யருளாய் பசுபதிப்
பிள்ளை யன்பு பெருகத் துதித்திடு
தெள்ளிய தேனார் செந்தமிழ்ப் பாவுக்
கிரங்கி யருளுக வின்பார் திருவகக்
கருணைவா ரிதிநின் கழலிணை சரணே.

## வாழி.

அருமறை வாழி மேலா மந்தணர் வாழி நீதி
தருமுறை யரசர் வாழி சகத்தில் [illegible] மாரி வாழி
திருநெறி மடவார் வாழி தேசமர் வலவை வாழி
தருமலி யாலநீழற் றந்தியும் வாழி வாழி.

சுபம்.

முற்றும்.